தனது காப்புரிமையை நிலைநிறுத்த போராடும் இசைஞானி இளையராஜாவின் போராட்டத்தின் பல்வேறு பின்னணிகளை விளக்கும் சிறுநூல்

# இசைஞானி ஏன் போராடுகிறார்?

கௌதம சன்னா



Published by :
**Black Town Publishers,**
Chennai, TamilNadu, India.
**Edition - First, 2024**
blacktownpublisher@gmail.com

**free distribution**

எனது பேஸ்புக் கட்டுரையின் முக்கியத்துவம் கருதி விலையில்லா தனி வெளியீடாக வெளியிட்ட பிளாக் டவுன் பதிப்பத்தாருக்கு எனது நன்றி

கௌதம சன்னா

# இசைஞானி ஏன் போராடுகிறார்?

தனது காப்புரிமையை நிலைநிறுத்த போராடும் இளையராஜாவின் போராட்டத்தின் பல்வேறு பின்னணிகளை விளக்கும் சிறுநூல்

கௌதம சன்னா




BLACK TOWN PUBLISHERS
Chennai - Tamil Nadu - India - 2024

# இசைஞானி ஏன் போராடுகிறார்?

எவ்வளவு எதிர்ப்புகள் வந்தாலும் அவதூறுகளை எதிர்கொண்டாலும் இளையராஜா ஏன் தனது நிலைப்பாட்டில் உறுதியாக இருக்கிறார் ? என்று எனக்கு எழுந்த கேள்வியின் விளைவுதான் இந்தக் கட்டுரை.

இளையராஜாவின் காப்புரிமை(காப்பிரைட்) பிரச்சினையை எப்படி அணுகுவது? அது இளையராஜாவிற்கு மட்டும் பொருந்துமா? எல்லா படைப்பாளிகளுக்கும் பொருந்துமா? என்கின்ற கோணத்தில் நீங்கள் படிக்கத் தொடங்கினால் இளையராஜாவின் போராட்டம் எவ்வளவு தீர்க்கமானது என்பது புரியும்.

இந்தப் பிரச்சனை ஏன் தோன்றியது என்பதைப் புரிந்து கொள்ள சிறிய பின்னணியைப் பார்ப்போம்...

இப்பிரச்சனை பரபரப்பாகப் பேசப்படுவதற்குக் காரணமே தொலைக்காட்சிகள் தான். அவைதான் மறைமுகமாக ஊடகத் தாக்குதல்களைத் தொடுத்தன. அதுவரையில் இப்பிரச்சினை இளையராஜாவிற்கும் திரைப்பட விநியோகஸ்தர்களுக்கும் இடையிலான பிரச்சினையாகவே இருந்து வந்தது. ஒரு

திரைப்படம் தியேட்டரில் வெளியானவுடனோ அல்லது முன்போ விநியோகஸ்தர்களிடமிருந்தும் திரைப்படத் தயாரிப்பாளர் தனக்கான லாபத்தைப் பெற்று விடுகிறார். அதே போல நடிகர்களும் இசையமைப்பாளரும் மற்ற கலைஞர்களும் தங்களுக்கான ஊதியத்தைப் பெற்று விடுகிறார்கள். பிறகு எப்படி கலைஞர்களுக்கு இதில் காப்புரிமை இருக்கிறது என்பதுதான் இப்பிரச்சனையும் அதன் பின்னுள்ள அடிப்படையான கேள்விகளும்.

வெளியிடப்பட்ட ஒரு திரைப்படம் தியேட்டரை விட்டு வெளியே போன பிறகு எப்போதாவது ஒருமுறைதான் மறு திரையிடல் காண்கிறது. ஆனால் அதில் இடம்பெற்ற பாடல்கள் மறுபடி மறுபடியும் கணக்கில் அடங்காத எண்ணிக்கையில் கேட்கப்படுகிறது. இந்த வருவாயை யார் எடுப்பது என்கிற நிலையில்தான் இசையமைப்பாளர்கள் பாடல் வெளியீட்டு நிறுவனங்களுடன் ஒப்பந்தங்களை மேற்கொண்டு பாடல்களைத் தொடர்ந்து வெளியிட வைக்கிறார்கள்.

இது திரைப்படத்தின் இரண்டாம் கட்ட வெளியீடாக மாறிவிடுகிறது. திரைப்படத்திற்கும் இதற்கும் இப்பொழுது தொடர்பில்லை. பாடல்கள் தனித்து திரைப்படங்களிலிருந்து பிரிந்து கழன்று கொள்வதால், பாடல்களை உருவாக்கிய கலைஞருக்கும் பாடல்களைத் தயாரிக்க உதவிய தயாரிப்பாளருக்கும் மட்டுமே உரிமத்தொகை (ராயல்டி) உரிமை இங்கு நிற்கிறது. எனவே சர்வதேச சட்டங்களின்படி வெளியீட்டு நிறுவனம் அல்லது

*தயாரிப்பாளர் மற்றும் இசையமைப்பாளர்களுக்கு இடையில் 50/50 சதவிகிதத்தில் ஒப்பந்தத்தை ஏற்படுத்திக் கொண்டு ராயல்டியைப் பெற்று வந்தார்கள். அதுவரையில் பிரச்சனைகள் பெரிதாக விவாதிக்கப்படவில்லை. ஆனால் பாடல் வெளியீட்டு நிறுவனங்கள் இந்த ராயல்டியைக் கொடுப்பதற்கும் பெரிய ஏமாற்று வேலைகளை நடத்தி வந்த நிலையில் தான் இளையராஜா இந்தப் பிரச்சினையைக் கையில் எடுக்கிறார். இது பிரச்சனையின் முதல் பகுதி.*

*இரண்டாவது பகுதி தனியார் தொலைக்காட்சிகள் மற்றும் தனியார் வானொலி நிறுவனங்கள் ஆதிக்கம் தொடங்கிய பொழுது பாடல் வெளியீட்டு நிறுவனங்களில் சந்தை சுருங்கி விட்டது. இது எப்படி நிகழ்ந்தது...*

*தனியார் தொலைக்காட்சி நிறுவனங்கள் - திரைப்படத் தயாரிப்பாளர்களிடமிருந்து ஒரு படத்தைக் குறிப்பிட்ட காலத்திற்கு ஒளிபரப்ப உரிமையை வாங்கிக் கொள்கிறார்கள். அதன் அடிப்படையில் உலகத் தொலைக்காட்சிகளில் முதன் முறையாக என்று விளம்பரம் செய்து வணிகம் மேற்கொள்கிறார்கள். இதில் மற்றொரு திருப்பம் நடக்கிறது. ஒளிபரப்பு உரிமையை வாங்கிக் கொண்ட தொலைக்காட்சி நிறுவனங்கள் யாரும் எதிர்பாராத விதமாக வேறொரு நடவடிக்கைகளை மேற்கொள்கின்றார்கள்.*

*திரைப்படங்களில் வந்த பாடல்களைத் தனியாக*

எடுத்து அவற்றை ஒளிபரப்ப தனித்தனியான மியூசிக் சேனல்களை உருவாக்கி, அதிலே அவற்றைத் தனித் தனியாக ஒளிபரப்பி வந்தார்கள். அதேபோல காமெடி ட்ராக்குகளைத் தனித் தனியாக வெட்டி எடுத்து அவற்றையும் தனி சேனல்களில் வெளியிட்டு வந்தார்கள். இதன் மூலமாக திரைப்படத் தயாரிப்பாளர்களை விடப் பல மடங்கு லாபத்தைத் தனியார் தொலைக்காட்சி நிறுவனங்கள் சம்பாதித்துக் கொண்டிருந்தன. ஒருமுறை அவர்கள் திரைப்படத்தை வாங்கி அவற்றைப் பகுதி பகுதியாகப் பிரித்து தொலைக்காட்சி சந்தையில் கொண்டு வந்ததின் மூலம் தயாரிப்பாளர்களுக்கும் இசையமைப்பாளர்களுக்கும் கிடைக்க வேண்டிய முறையான ராயல்டி கிடைக்காமல் தடுமாறி நின்றார்கள்.

ஏற்கனவே ரெக்கார்டிங் நிறுவனங்களால் தனது ராயல்டியை இழந்திருந்த இளையராஜா தனியார் தொலைக்காட்சி நிறுவனங்களினால் மீண்டும் அதே போல் பெரும் ஏமாற்றத்தை எதிர்கொள்கின்றார். இது இளையராஜாவிற்கு மட்டும் நடந்தது அல்ல. ஏறக்குறைய எல்லா இசையமைப்பாளர்களுக்கும் நிகழ்ந்த ஒன்றுதான்.

ஆனால் இளையராஜா தனக்கான ராயல்டியை இதில் கேட்கிறார். நியாயமாக தனியார் தொலைக்காட்சி நிறுவனங்கள் உரிய ராயல்டியைத் தந்திருக்க வேண்டும். அதற்கு பதில் அதிர்ச்சி அடைந்த தனியார் தொலைக்காட்சி நிறுவனங்கள் தங்களது தொழிலுக்கு ஆபத்து வரும் என்று அஞ்சி

இளையராஜாவின் மீது மறைமுகத் தாக்குதலைத் தொடுத்தன. அதற்கு ஊடகங்களும் ஒத்துழைத்தன. இளையராஜாவின் அழுத்தம் அதிகமானவுடன் தொலைக்காட்சி நிறுவனங்கள் அவரின் பாடல்களை வெளியிடுவதையே நிறுத்திவிட்டன.

பிறகு, தனது உரிமையை நீதிமன்ற மன்றத்தின் மூலம் இளையராஜா நிலைநாட்டியதால் அனைத்துத் தனியார் இசை சேனல்களும் அவரது பாடல்களின் ஒலிபரப்பை நிறுத்திய நிலையில் ராயல்டி எனும் உரிமை களத்தில் தனியாளாய் தனித்து விடப்பட்டார் இளையராஜா. ஊடகங்களின் கூட்டுத்தாக்குதல்கள் அவர் மீது திணிக்கப்பட்டன. தனது உரிமையை நிலைநாட்ட அவர் மேற்கொண்ட அனைத்து முயற்சிகளும் பணத்தாசை என்கின்ற எளிய தாக்குதல்களில் சிறுமைப்படுத்தப்பட்டன.

ஆனால் அவர் பாடல்களை வைத்துப் பல பத்தாண்டுகள் கோடிக்கணக்கில் சம்பாதித்த தனியார் சேனல்கள் இந்தக் குற்றச்சாட்டிலிருந்து எந்த விதமான சிராய்ப்பும் இல்லாமல் நழுவிக் கொண்டன. அதாவது வெளிப்படையாகச் செய்த அறிவுத் திருட்டிலிருந்து அவை எந்தவிதமான உறுத்தலும் இன்றி நழுவிக் கொண்டன. இதிலும் இளையராஜா குற்றவாளியாக மாற்றப்பட்டார். ஒரு வகையில் கார்ப்பரேட் நிறுவனங்களை எதிர்த்து இளையராஜா தொடுத்த தாக்குதல்கள் அவருக்கு எதிராக இருந்தாலும் கூட கடுமையான நெஞ்சுரத்தோடு அவர் இதை எதிர்கொண்டு வருகிறார்.

*ஒருவேளை இளையராஜா என்கின்ற கலைஞர் ஐரோப்பாவில் பிறந்து 1500 படங்கள் 7000 பாடல்கள் என்று இசையமைத்திருந்தால்? சட்டப்படி அவருக்கான உரிய ராயல்டி தொகையைப் பெற்றிருந்தால்? உலக பணக்காரர்கள் வரிசையில் அவர் அமர்ந்திருப்பார். ஆனால் இந்தியாவில் அப்படி எந்த காப்புரிமைப் பாதுகாப்பும் அவருக்கு வழங்கப்படாததால் அவர் பெரிதாக ஏமாற்றப்பட்டுள்ளார்.*

*ஆயினும், தனக்கு வரும் ராயல்டி தொகையை இசைக் கலைஞர்கள் சங்கத்திற்கு ஏற்கெனவே அவர் வழங்கிவிட்டதால் இனி அவரின் போராட்டம் ராயல்டி தொகைக்கு என்பது பின்னுக்குப் போய்விட்ட நிலையில், இப்போது இளையராஜாவின் போராட்டம் மூன்றாவது பரிணாமத்தை எட்டியுள்ளது. இந்தியக் காப்புரிமை சட்டம் மற்றும் பன்னாட்டுக் காப்புரிமைச் சட்டங்களோடு இணைத்து இப்பிரச்சனையை ஆராய்ந்த எனக்குக் கடும் அதிர்ச்சி. உண்மையில் இளையராஜாவின் போராட்டத்தின் மூன்றாம் கட்ட போராட்டத்தின் பின்னணி என்ன? நீங்களும் அதிர்ச்சியாவீர்கள்...*

## உங்கள் மனதில் உருவான ஒரு கற்பனைக்கு நீங்கள் உரிமையாளர் இல்லை என்றால் வேறு யார்தான் உரிமையாளர்?

இந்தக் கோணத்தில் யோசித்து இந்தப் பகுதியைப் படியுங்கள். பிரச்சனையின் மையத்திலிருந்து இளையராஜாவை விலக்கிவிட்டு ஓர் இசையமைப்பாளர் என்பவரை எடுத்துக்காட்டாக வைத்துக் கொண்டு பிரச்சனையைப் பார்க்கலாம்.

## இசையமைப்பாளர் என்றால் யார்?

சர்வதேசச் சட்டங்கள் பின்வருமாறு வரையறையைத் தருகின்றன.

*As a songwriter, beat producer, or composer (automatically have copyright protection for his original musical works. This means that he has the exclusive right to reproduce, perform, and distribute his music.)*

தமிழில் சொல்வதென்றால் பாடலாசிரியர், ஒலிக் கோர்வையை உருவாக்குபவர், இசைத் தொகுப்பாளர் என்பவர்தான் இசையமைப்பாளர்..

இதில் வரும் சொல்லான songwriter அல்லது பாடல் ஆசிரியர் என்னும் சொல் இந்தியாவில் தவறாகப் பொருள் கொள்ளப்படுகிறது. மேற்கத்திய இசையில் மரபில் இசையமைப்பாளர் என்பவர் பாட வேண்டிய பாடலை நொட்டேஷனாக அதாவது மெட்டாக காகிதத்தில் எழுதி விடுகிறார். அதனால்

அவர் பாடலாசிரியர் என்று அழைக்கப்படுகிறார். (இந்தியாவில் இந்தப் பாணியை மிக நீண்ட காலம் பின்பற்றுபவர் இளையராஜா) இந்த மெட்டை அல்லது நொட்டேஷனை தான் நிகழ்த்து கலைஞர்களான பாடகர்கள் பாடுகிறார்கள். இந்த நொட்டேஷனுக்கு இணையாக எழுதப்பட்ட பின்னணி இசையை நிகழ்த்து கலைஞர்கள் இசைக்கின்றார்கள்.

இந்தியாவில் பாடலாசிரியர் என்றால் பாடலுக்கு வரிகளை எழுதிய கவிஞரைத் தான் குறிப்பிடும் வழக்கம் இருக்கிறது. இதையே இந்தியக் காப்புரிமைச் சட்டம் பயன்படுத்துகிறது என்பதும் குழப்பத்திற்கு ஒரு காரணம். இப்பொழுது ஒரு திரைப்படத்தில் இசைத் தொடர்பாக என்ன நடக்கிறது எனப் பார்ப்போம். ஒரு தயாரிப்பாளர் படத்தைத் தயாரிக்க வேண்டும் என்று விரும்புகிறார். அதற்கு ஓர் இயக்குநரை நியமிக்கிறார். அதைப்போலவே இசையமைப்பாளரும் நியமிக்கப்படுகிறார். நடிகர் உள்ளிட்ட மற்ற கலைஞர்களும் தேர்வாகிறார்கள்.

திரைப்படப் பணிகள் தொடங்கிய பிறகு இயக்குநர் இசையமைப்பாளரிடம் கதையையும் பாட்டிற்கான சூழலையும் சொல்கின்றார். இசையமைப்பாளர் பாடலை எழுதிக் கொடுத்து விடுகிறார். அதற்குக் கவிஞர் வரிகளை எழுதுகிறார். பாடகர் பாடுகிறார். கருவிகளை வாசிப்பவர்கள் வாசிக்கிறார்கள். பாடல் முழுமை பெறுகிறது. இந்த வரிசையில் இடம்பெறும் நபர்கள் ;

*தயாரிப்பாளர்*

*இயக்குநர்*

*இசையமைப்பாளர்*

*கவிதை வரிகளை எழுதியவர் (கவிஞர் / Lyricist)*

*பாடகர்கள்*

*கருவி இசைப்பவர்கள்*

*பதிவு செய்யும் தொழில்நுட்பர்கள்*

*இந்தப் பட்டியலில் யாருக்குக் காப்புரிமை இருக்கிறது?*

*இந்த இடத்தில் அறிவு சார் சொத்துரிமையின் சட்டப்படியான விளக்கத்தைப் புரிந்து கொண்டால் அடுத்த நிலைக்குப் போகலாம்.*

*அறிவுசார் சொத்து (IP/intellectual property) என்பது கண்டுபிடிப்புகள் போன்ற மனதின் படைப்புகள், இலக்கிய மற்றும் கலைப் படைப்புகள்; வடிவமைப்புகள்; வர்த்தகத்தில் பயன்படுத்தப்படும் சின்னங்கள், பெயர்கள் மற்றும் (Intellectual property (IP) refers to creations of the mind, such as inventions; literary and artistic works; designs; and symbols, names and images used in commerce) என்பதை உலக அறிவுசார் சொத்துரிமைக் கழகம் (WIPO - world intellectual property organization)வரையறுத்துள்ளது.*

*இதை இந்தியக் காப்புரிமைச் சட்டமும் ஏற்றுக் கொண்டுள்ளது. எனவே அறிவுசார் சொத்துரிமையின்*

அடிப்படையே ஒரு படைப்பின் மூல கருத்து மீதுதான் அமைந்திருக்கிறது. அக்கருத்தை யார் உருவாக்குகிறாரோ அவருக்கே அப்படைப்பின் மீதான முழு உரிமை உண்டு. உதாரணமாக ஓர் இசையமைப்பாளர் தானே உருவாக்கி வெளியிட்டு சந்தைக்குக் கொண்டு வந்தால் அதன் அனைத்து வருமானம் மற்றும் ராயல்டி தொகை முழுவதும் அவருக்குச் சேர்கிறது.

ஆனால் ஒரு திரைப்படம் என்று வரும் பொழுது அப்படி நிகழ்வதில்லை அது கூட்டுப் பங்களிப்பாக வெளிப்படுகிறது. அப்படி வெளிப்பட்டாலும் மூலக்கருத்து என்பது யாருக்குச் சொந்தம் என்பதில் தான் காப்புரிமையின் உயிரே அடங்கியிருக்கிறது. மேலே கண்ட நபர்களின் பட்டியலின்படிப் பார்த்தால் ஓர் இசைக் கோர்வையை உருவாக்குவதில் யாருடைய பங்கு முக்கியமானது?

- தயாரிப்பாளர் பணம் போடுகிறார்; ஆனால் அவருக்கு இசை பற்றி எதுவும் தெரியாது.
- இயக்குநர் சூழலை - கதையைச் சொல்கிறார். அவருக்கு எப்படி இசை போடப்படும் என்றும் தெரியாது.
- கவிஞர் மெட்டுக்கு கவிதை வரிகளை எழுதுகிறார். அவர் எழுதுகின்ற வரையில் மெட்டின் அடிப்படை அவருக்குத் தெரியாது.
- பாடகர் பாடலைப் பாடுகிறார். ஆனால் இசையமைப்பாளர் சொல்லித் தருகின்ற

வரையில் என்ன பாடப் போகிறோம் என்று அவருக்குத் தெரியாது.

- இசைக்கருவி வாசிப்பவர்கள் இசையமைப்பாளர் நொட்டேஷன் தருகின்ற வரையில் என்ன வாசிக்கப் போகின்றோம் என்றும் அவர்களுக்கும் தெரியாது.

- இறுதியாக இது அனைத்தையும் தெரிந்த ஒரே நபராக இசையமைப்பாளர் மட்டுமே நிற்கின்றார். அவர் தனது கற்பனையை வடிவமைத்து, கவிஞரைக் கவிதை வரிகளை எழுதச் செய்து, பாடகரைப் பாட வைத்து, இசையமைப்பாளரை இசைக்க வைத்து, ரெக்கார்டிங் செய்பவர்களை ரெக்கார்டிங் செய்ய வைத்து, பதிவு செய்த பாடலை அல்லது இசைக்கோர்வையை இயக்குநருக்கும் தயாரிப்பாளருக்கும் வழங்குகின்றார். எனவே படைப்பின் மூல காப்புரிமை இசையமைப்பாளருக்கே உரியது என உலகத்தின் அனைத்து அறிவுசார் காப்புரிமை சட்டங்களும் உறுதி செய்கின்றன. ஏனிந்த நிலைப்பாடு என்றால் - தனது இசையின் மூல வடிவத்தை நிரூபித்துக் காட்டும் திறன் இந்தப் பட்டியலில் உள்ள வேறு யாருக்கும் இருக்காது என்பதினால் தான்.

உதாரணமாக ஒரு பாடல் உருவாக்கத்தை எடுத்துக் கொள்வோம்; ஓர் இசையமைப்பாளர் ஒரு மெட்டை உருவாக்கி வைத்திருக்கிறார். அதற்கு

யார் கவிதை வரிகளை எழுத வேண்டும், யார் பாட வேண்டும் யார் இசையமைக்க வேண்டும் என்கின்ற தேர்வை அவரே செய்கின்றார். அதாவது பாடலுக்கான இசைக்கருவிகளைத் தேர்வு செய்வது போலவே கவிஞர்களையும் பாடகர்களையும் இசைக்கருவி வாசிப்பவர்களையும் அவர் தேர்வு செய்து கொள்கின்றார். அது அவரது படைப்பு உரிமை. தனது படைப்பு முழுமை பெறுகின்ற வரையில் இதற்கு உதவி செய்பவர்களை மாற்றி அமைப்பது அவரது சொந்த விருப்பத்தைச் சார்ந்தது. அதாவது சொந்த யோசனையைச் சார்ந்ததே.

ஒரு பாடலை ஒரு காலத்தில் ஒரு குழுவை வைத்து வாசிக்க வைப்பது அல்லது பிற்காலத்தில் வேறு குழுவை வைத்து வாசிப்பதற்குக் கூட அவருக்குத் தெரியும். அதுமட்டுமின்றி படைப்பின் மூல வடிவத்தை மாற்றி அமைத்து சோதிப்பதற்குக் கூட அவருக்கே முழு உரிமையும் படைப்புத் திறனும் உள்ளது. இதில் வேறு யாரும் தலையிட முடியாது என்பதை விடத் தலையிடுவதற்கான அறிவு பெற்றவர்களாக இருக்க மாட்டார்கள். அதுதான் படைப்பின் வலுவான அடிப்படையே. எனவே தான் படைப்பு உரிமை என்பது மிக வலுவாக அறிவுசார் சட்டத்தில் பாதுகாக்கப்படுகின்றது. பன்னாட்டுச் சட்டங்களில் படைப்பின் உரிமை மொத்தம் ஆறு வகையாகப் பிரிக்கப்படுகிறது.

1. பொருளாதார உரிமை (economical right)

2. தார்மீக உரிமை (Moral right)

*மேலும் நான்கு நிலையான உரிமைகள் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளன, அவை.....*

*3. படைப்பை மறு ஆக்கம் செய்தற்கான உரிமை (the right to reproduce the work)*

*4. படைப்பை மாற்றித் தருவதற்கான உரிமை (the right to transfer the work)*

*5. படைப்பை நிகழ்த்துவதற்கும் வெளிப்படுத்து வதற்குமான உரிமை (the right to perform or display the work) மற்றும்*

*6. உருவாக்கியப் படைப்பின் அடிப்படையில் புதிய படைப்பை உருவாக்குவதற்கான உரிமை (the right to make new creative works based on the original underlying work)*

*மேற்கண்ட இந்த ஆறு உரிமைகளில் படைப்பாளர் பொருளாதார உரிமையை விட்டுக்கொடுத்தாலும் அவர் உயிரோடு இருக்கின்ற வரையில் மற்ற ஐந்து உரிமைகள் அவருடைய படைப்போடு பிறந்தவை. அதை யாரும் தடுக்கவோ பறிக்கவோ முடியாது என்பதுதான் சர்வதேசச் சட்டங்களின் நிலைப்பாடு. அவரது வாரிசுகளுக்கு அவர் மறைந்து 60 ஆண்டுகள் வரை அது நடைமுறையில் இருக்கும்.*

## ராயல்டி என்று வரும்போது என்ன நடக்கிறது?

*ராயல்டி என்று வருகின்ற பொழுது அதற்காகச் சில மாறுதல்கள் செய்யப்படுகின்றன. அதாவது வருகின்ற*

*ராயல்டி தொகையைப் பகிர்ந்து அளிப்பதற்காகப் படைப்பின் உரிமை பகிர்ந்து அளிக்கப்படுகிறதே தவிர படைப்பின் மூல முற்றான உரிமை பகிர்ந்து அளிக்கப்படுவதில்லை. அது முழுக்க முழுக்க படைப்பாளரையே சார்ந்தது.*

*அதாவது ஒரு படத்திற்காகப் படைக்கப்பட்ட இசைக்கு வழங்கப்படும் ராயல்டி அனைத்தும் காப்புரிமை அல்லது copy right என்கின்ற அடிப்படையில் வழங்கப்படுவது இல்லை. அப்படி என்றால் மற்றவர்களுக்கு இதில் உரிமை இல்லையா? உறுதியாக இருக்கிறது அதன் வடிவம் தான் வேறு.*

*இந்தியச் சொத்துரிமைச் சட்டத்தில் பின்வருமாறு பிரிக்கப்படுகிறது.*

*ராயல்டி அடிப்படையில் படைப்பின் "காப்புரிமை"யை இசையமைப்பாளரும் தயாரிப்பாளரும் பகிர்ந்து கொள்கிறார்கள்.*

*பாடலுக்கு வரிகளை எழுதிய கவிஞருக்கு "இலக்கியக் காப்புரிமை"யின் (Literary Right) அடிப்படையில் உரிமை வழங்கப்படுகிறது. ராயல்டி வழங்க வேண்டும் என்கிற அவசியம் இல்லை.*

*பாடலைப் பாடிய பாடகருக்கு "நிகழ்த்து உரிமை" (Performance Right) அடிப்படையில் Moral Right உரிமைக் கோர முடியும். ராயல்டி வழங்க வேண்டும் என்கிற அவசியம் இல்லை.*

*பின்னணி இசைத்த கலைஞர்களுக்கும் இதை*

நிலைதான். இவர்களின் உரிமை பெரும்பாலும் *Moral Right* ஆகவே இருக்கிறது. அதனால்தான் அவர்களுக்கு ராயல்டி கிடைப்பதில்லை.

இந்தப் பின்னணியில் இப்போது இளையராஜாவிற்கு வருவோம்.

## இந்தக் காப்புரிமை பிரச்சனையில் ஏன் இளையராஜா இவ்வளவு முனைப்பு காட்ட வேண்டும்? எல்லா தாக்குதல்களையும் எதிர்த்து உறுதியாகப் போராட வேண்டும்.?

தொடக்கத்தில் இளையராஜா ராயல்டி பிரச்சினையைக் கையில் எடுத்த போது அது வெறும் வருவாய் பிரச்சினையாக மட்டுமே இருந்தது. ஆனால் ராயல்டி தொகையைத் தர மனமில்லாதவர்கள் அல்லது பல ஆண்டுகள் அவரது அறிவைத் திருடிப் பிழைத்துக் கொண்டிருந்தவர்கள் ஓர் எதிர் நிலையை எடுக்கின்றார்கள். அதாவது இளையராஜா என்கின்ற இசை அமைப்பாளர் தயாரிப்பாளருக்காக மட்டுமே அவர் வேலை செய்தார். எனவே அந்தப் பாடல்களின் மீது அவருக்கு உரிமையே ஏதும் இல்லை என்று சொல்லத் தொடங்கினார்கள்.

இது ஒவ்வொரு நாளும் வளர்ந்து தீவிரப் பிரச்சாரமாக மாறி இளையராஜா இசை அமைத்த எந்தப் பாடல்களுக்கும் அவருக்கே உரிமை இல்லை என்கின்ற கருத்துருவாக்கத்தைச் சமூகத்தில் அவர்கள் உருவாக்கினார்கள். இந்த ஊழலுக்கு ஊதுகுழலாக இளையராஜாவின் மீது சாதியவெறி கொண்ட

பிற்போக்குவாதிகளும் இணைந்து கொண்டதினால் ஒரு படைப்பாளனின் அசலான அடிப்படை உரிமையே இவர்கள் தகர்க்கத் தொடங்கினார்கள்.

எனவே இளையராஜாவிற்கு வேறு மாற்று வழியே இல்லை. தனது படைப்பின் மூல உரிமையைத் தற்காத்துக் கொள்வதற்கு அவர் இருக்கின்ற ஒரே சட்டப்பூர்வமான கருவி ராயல்டி என்கின்ற தொகை தான். இந்த ராயல்டி தொகையினை உறுதி செய்வதின் மூலம் மட்டுமே இளையராஜாவின் படைப்பு மூல உரிமையை அவர் தக்க வைத்துக் கொள்ள முடியும்.

ராயல்டி தொகையை முழுவதும் இசைக் கலைஞர்கள் சங்கத்திற்கு வழங்கிய பிறகு இளையராஜாவிடம் எஞ்சி நிற்பது அவரது படைப்பின் மூல காப்பு உரிமையான *Moral Right* மட்டுமே என்பது தான் சட்டப்படியான நிதர்சன உண்மை. ராயல்டி எனும் பணத்திற்காக ஒரு மாபெரும் கலைஞனை அவன் உருவாக்கியப் படைப்பிலிருந்து விலக்கி வைக்க எடுக்கப்படும் மோசடியான இந்த நடவடிக்கைதான் அச்சத்தைத் தருகிறது. இது எதிர்காலத்தில் மற்ற படைப்பாளர்களுக்கும் நிகழலாம். இந்தப் பின்னணியினை நீதிமன்றம் புரிந்து கொள்ளும்போது இளையராஜாவின் படைப்புரிமைக்கு நியாயம் கிடைக்கும் என நம்புகிறேன்.

தனது படைப்பின் மீது அசைக்க முடியாத நம்பிக்கையும் உறுதியும் வைத்துக் கொண்டிருக்கும்

ஒரு கலைஞன் தனது படைப்பின் உரிமை கோரி தெருவில் இறங்கிப் போராடுவது இந்தச் சமூகத்திற்குத் தலை குனிவு. இளையராஜா தனது உரிமையை நிலைநாட்டும் பொழுது அது அவருக்கான உரிமையாக மட்டும் இருக்காது ஒட்டுமொத்தமாகப் படைப்பின் உரிமையைப் பெற உள்ள அனைவருக்கும் பொதுவாகத் தான் அது மாறும். அந்த வகையில் நிகழ்காலத்தில் இருக்கும் இசை அமைப்பாளர்கள் இப்பிரச்சினையில் மௌனம் காப்பது தங்களது படைப்பின் மீது அவர்களுக்கு எந்த நம்பிக்கையும் இல்லை என்பதைக் காட்டுகிறது.

எனவே தான் இப்பிரச்சனையின் மூலத்தைப் புரிந்து கொண்ட போது அதிர்ச்சியாக இருந்தது. இளையராஜா எனும் கட்டுக்கடங்காத கலைஞனின் படைப்பு பிற்காலத்தில் அவருக்குச் சொந்தமானது இல்லை எனச் சட்டப்பூர்வமாக நிறுவ முயலும் மோசடிக் கும்பலின் துரோகங்களை எதிர்த்து களம் காணும் இசைஞானிக்குத் துணையாக இருக்க வேண்டியது தான் மனித உரிமையை நேசிக்கும் ஒவ்வொருவரின் கடமை.

இளையராஜா உருவாக்கிய இசைக்கு அவர் உரிமையாளர் இல்லை என்றால் வேறு யார்தான் இருக்க முடியும்..? வேறு வார்த்தையில் சொன்னால் உங்கள் மனதில் உருவான ஒரு கற்பனைக்கு நீங்கள் உரிமையாளர் இல்லை என்றால் வேறு யார்தான் உரிமையாளர்?

இந்த அடிப்படையைப் புரிந்துக் கொள்ளாமல்

இளையராஜா பணத்திற்காகப் போராடுகிறார் என்று சிறுமைப்படுத்துபவர்கள் வெட்கித் தலைகுனிய வேண்டும்.

(பின்குறிப்பு - இளையராஜா எனும் மாபெரும் கலைஞன் எனக்கும் சமூகத்திற்கும் செய்த மாபெரும் பங்களிப்பிற்கான நன்றியே இக்கட்டுரை. கௌதம சன்னா; 06.05.2024)

